# போர்பறைப் பாடல்கள்

## (தமிழீழ எழுச்சிப் பாடல்கள்)




பாடல்கள் - முல்லைச்செல்வன்

இசை - தமிழீழ இசைக்குழு

பாடியவர்: தேவா-சங்கர்

அடிபணிந்து வாழ்வதோ
முடிவணங்கி வீழ்வதோ
துடிதுடிக்கும் கரங்கள் இங்கு
துவண்டு இடப்பதோ...
முடிவெடுக்கும் மனங்கள் இங்கு
மருண்டு தவிப்பதோ...
எழுந்திடு துணிந்திடு போர் புரிந்திடு 11

(அடிபணிந்து)

எதிரி உடல் இரும்பா - உன்
இதயம் என்ன துரும்போ - சொல்
உயிரும் என்ன கரும்பா - நீ
உணர்ந்து பாரு தமிழா
போன காலங்கள் போகட்டும் - இனி
புதிய வரலாறு படைப்போம்
புலிகள் விளையாடும் களந்தனில் - அந்த
எதிரி படைகளைச் சிதைப்போம்
எழுந்திடு துணிந்திடு போர் புரிந்திடு 11

(அடிபணிந்து)

கையில் என்ன விலங்கா - நீ
காட்டில் வாழும் விலங்கா - சொல்
வையகத்தில் கலங்கா நீ
வாடலாமோ தமிழா
வீர வரலாறு படைத்திடும் - நம்
வேங்கை அணியோடு இணைவோம்
வெற்றித் திருநாடு அமைத்திட - நாம்
யுத்த களமாடி ஜெயிப்போம்
எழுந்திடு துணிந்திடு போர் புரிந்திடு

(அடிபணிந்து)

பாடியவர்: குட்டிக் கண்ணன்

ஆண்டாண்டு காலமதாய் நாம்
ஆண்டு வந்த பூமி
அப்பன் ஆச்சி பாட்டன் பூட்டி
சுத்தி வந்த வீதி
எங்கள் அக்கா அண்ணையரே
எதிரி இங்கு வரலாமா
எங்கள் மண்ணை ஆள நினைச்சா
வேங்கை நாங்க விடலாமா
(ஆண்டா)

வீட்டுக் கொரு வீரன் போனா
விடுதலையும் நாளை வரும்
வீதியிலே சுத்தித் திரிஞ்சா
அடிமையாகச் சாக வரும்
ஆட்டம் போடும் ராணுவங்கள்
அலறி ஓடணும் - நாம்
அடிமை இல்லை என்று புதிய
பரணி பாடணும்
(ஆண்டா)

எங்கள் வேங்கைத் தலைவன் தானே
எங்களுக்கு வழிகாட்டி
எதிரிகளின் பாசறை யாவும்
எரித்திடுவோம் தீ மூட்டி
பொங்கி எழு புயலாக போர்க் களத்தில் விளையாடு
புனையட்டும் தமிழீழம் புதிய வீர வரலாறு
(ஆண்டா)

என்னினமே என் சனமே
இன்னும் என்ன மயக்கமா
எதிரிகளின் பாசறையாவும்
எரித்திடவே தயக்கமா
பண்டார வன்னியனின் வாரிசல்லவா - பகையை
பந்தாடி வென்றிடவே ஆசையில்லையா
(ஆண்டா)

பாடியவர்: இன்பநாயகி

தங்கையரே தம்பியரே நீங்கள்
சிந்திக்கும் நேரமிது - கொடும்
சிங்கப் படையை செங்களத்தில்
சந்திக்கும் காலமிது
எங்களினம் வாழ்ந்திடவே
பங்கமது நீங்கிடவே
பொங்கி எழுந்திடு பூகம்பமாகவே
சிங்கப் படை எங்கள் தேசம் விட்டோடவே

(தங்கை)

தங்கத் தலைவனின் பாதையிலே சென்று
தாயக பூமியை மீட்டிடுவோம்
எங்கும் உரிமைப் புரட்சி வெடித்திட
ஈழச் சுதந்திரம் காத்திடுவோம்
மங்கள கீதம் நம் மண்ணில் ஒலித்திட
மாறா உறுதியில் நாமும் போராடிட

(தங்கை)

ஆணும் பெண்ணும் ஒன்று சேர்ந்து போராடணும்
ஆதிக்கப் பேய்களும் அஞ்சியே ஓடணும்
வீட்டுக்கு வீடிங்கு வேங்கையாய் மாறணும்
வெங்கள மாடியே விடுதலை தேடணும்
மானத் தமிழ்க் கொடி வானில் பறக்கணும்
மாவீரர் கனவினை நாம் நனவாக்கணும்

(தங்கை)

பாலத்தில் காலத்தை ஓட்டுவதா - தமிழ்
ஈழத்தை சிங்களம் ஆட்டுவதா
வீரம் மானம் இல்லாக் கோழையென்று
எதிர் காலம் உம்மைப் பழிசாட்டுவதா
நாளை நமக்கொரு நாடு மலர்ந்திட
நாடி ஓடிக் களம் ஆடிக் களித்திட

(தங்கை)

போர்ப்பறை பாடல் **04**

பாடியவர்: இராசேந்திரம்

என்னடா இளைஞனே இன்னும் என்ன அச்சமா
எதிரி காலில் அடிமையாய் வாழ்வதுதான் சொர்க்கமா
அன்னை மண்ணைக் காத்திட உன் மனம் தயக்கமா
அஞ்சி நீயும் வாழ்வதால் தமிழினம் மதிக்குமா
சொல்லடா... சொல்லடா.. சொல்லடா...

தாய் கொடுத்த பால் உனக்கு வீரம் ஊட்டவில்லையா
தாயகத்தை காத்திடத் தயக்கமென்ன சொல்லடா
பேய்கள் உந்தன் ஊரெரித்து நாசம் செய்ய விடுவதா
பேடிபோல ஓடிஓடி உரிமை கெட்டுச் சாவதா
சொல்லடா... சொல்லடா... சொல்லடா...

உயிரினும் அரிய தெங்கள் மானம் என்று எண்ணடா
உறுதியுள்ள தமிழனாக உன்னை ஆக்கிக்கொள்ளடா
இமயம் தன்னில் கொடியை நட்ட மறவர் பிள்ளை அல்லவா
இன்னும் இங்கு பூனைபோல இருக்கும் எண்ணம் நல்லதா
சொல்லடா... சொல்லடா... சொல்லடா...

விதைகளாக வீழ்ந்துநிற்கும் வேங்கைகளைப் பாரடா
விடுதலைக்கு உதவிடாமல் விலகிஓடல் ஏனடா
அடிமை வாழ்வில் முடிவணங்கி தமிழினமேசாவதா
அறிவு அற்ற மனிதனாக அவல வாழ்வு வாழ்வதா
சொல்லடா... சொல்லடா சொல்லடா ..

(என்னடா)

பாடியவர்: குட்டிக்கண்ணன்

குக்கூக் குக்கூக் குயிலக்கா கொஞ்சம் நில்லக்கா - நீ
கூவுற பாட்டிலே வீரம் இருக்கணும் சொல்வேன் கேளக்கா
- இது

இது வேங்கைகள் வாழும் நாடு -அவர்
வீரத்தையே தினம் பாடு பாடு

(குக்கூ)

அஞ்சல் அகற்றிட நஞ்சினை ஏந்தி
வெஞ்சமர் ஆடிடும் பிள்ளை - அவர்
வீரத்துக்கே இணையில்லை - இதை
நெஞ்சில் நினைந்து அஞ்சல் அகற்றி
கொஞ்சும் குரல்தனில் பாடக்கா

(குக்கூ)

இந்தியம் வந்திங்கு வஞ்சனை செய்தது
எங்கள் புலி பயந்தாரா - கொண்ட
லட்சியத்தை மறந்தாரா - அவர்
சத்தியம் காக்க யுத்தம் புரிந்த
சங்கதியைத் தினம் பாடக்கா

(குக்கூ)

காலைப் பொழுதினில் சோலை நடுவினில்
கானம் இசைத்திடும் குயிலக்கா - சுப
ராகம் இனிக்கும் உன் குரலக்கா
நாளை நமக்கொரு ஈழம் மலர்ந்திடும்
நாலு திசை எட்டப் பாடக்கா

(குக்கூ)

பாடியவர்: இராசேந்திரம் - தவமலர்

எல்லோருக்கும் இந்த மண் சொந்தம்
எடுப்போம் ஆயுதத்தை
எங்களினம் துன்பமின்றி வாழ
அமைப்போம் தாயகத்தை
பொல்லாத பகைவர்கள் சொல்லாமல் ஓடவேணும்
புலிப்படைக் கெதிர்ப்படை இல்லையென்று ஆடவேணும்

(எல்லோ)

பார்வையாளரா இருந்தது போதும்
பங்காளியா நாங்கள் மாறிடணும்
பழந்தமிழ் பெருமையை இழந்து விடாமல்
களந்தனில் புலியாய்ச் சீறிடணும் - இது
சத்தியத்தின் யுத்தமடா - வெற்றி
நிச்சயம் நம் பக்கமடா - தமிழர்

(எல்லோ)

வட்டமேசை நீட்டுமேசை
வளைஞ்ச மேசை பின்னால் நெளிஞ்சமேசை
எத்தனையோ மேசைகளில் பேச்சுவார்த்தை - நம்மை
ஏமாத்தத் தானே இந்தச் செப்படி வித்தை - அவர்
திட்டமதைத் தகர்த்திடுவோம் - தமிழ்
ஈழமதை அமைத்திடுவோம் - தமிழர்

(எல்லோ)

போர்ப்பறை பாடல் **07**

பாடியவர்: தவமலர்

என் அன்னை பூமியே ஏனிந்தச் சோகம்
இதயங்கள் மாறவே யார் செய்த பாவம்
சமராடும் பூமியில் சில வேங்கைகள்
உயிராயுதங்களாய் உன் செல்வங்கள்
வேடிக்கை பார்க்குதே சில உள்ளங்கள் - இது
வாடிக்கையானதால் துயர் கோலங்கள் - 11

(என்)

பாச மென்ற கூட்டுக்குள்ளே
பதுங்கி வாழலாமா
தேசம் என்ற செல்வம் காக்க
மறந்து போகலாமா
ஆசை இங்கு ஆருக்கில்லை
அனுபவிக்க தேசம் இல்லை
அழிக்க வந்த ராணுவத்தை
துரத்திடத்தான் மனசும் வரலை
வேடிக்கை பார்க்குதே சில உள்ளங்கள் - இது
வாடிக்கையானதால் துயர் கோலங்கள்

(என்)

எதிரி ஆடும் போரால் மண்ணில்
குருதி ஓடும் வேளை
எறிகணைகள் வீசி எங்கள்
உயிர் பறிக்கும் நாளை
பேதையாக வாழலாமா பாதை மாறிப் போகலாமா
பிறந்த மண்ணின் உரிமைகாக்கும் பெரும்பணியை
மறக்கலாமா
வேடிக்கை பார்க்குதே சில உள்ளங்கள் - இது
வாடிக்கையானதால் துயர் கோலங்கள் - 11

(என்)

பாடியவர்: ரதன்

பூமிக் கொரு சூரியன் உண்டு
பூவுக் கொரு வாசனை உண்டு
சாமிக் கொரு கோவிலு முண்டம்மா - நம்ம
தமிழினத்தின் சுதந்திரந்தான் இன்னும் வரலையே!

(பூமிக்)

பாட்டுக் கொரு ராகம் உண்டு
வீட்டுக் கொரு வாசல் உண்டு
பூட்டுக் கொரு திறப்பு முண்டம்மா - நம்ம
நாட்டுக் கொரு சுதந்திரத்தை நாங்க தேடலை

(பூமிக்)

வீரம் மிக்க தலைவன் உண்டு
வெற்றி தேட வழிகள் உண்டு
போர்க்கலங்கள் ஏராளம் உண்டு - ஆனால்
போர்க்களத்தில் குதித்திடத்தான் மனசு வரலையே-சிலர்க்கு
போர்க்களத்தில் குதித்திடத்தான் மனசு வரலையே

(பூமிக)

பட்டம் பல பெற்றால் என்ன
பார் புகழ வாழ்ந்தால் என்ன
பெற்றவர்க்கு பெருமை சேர்க்கணும் - நாங்க
பிறந்த மண்ணை சுதந்திரமாய் வாழ வைக்கணும்

(பூமிக)

பாடியவர்: புவனா

இறுதி கால மன உறுதியோடு தமிழ்
ஈழம் அமைக்க வா வா -
எதிரி படையாவும் சிதறி ஓடக் களம்
ஆடிக் களிக்க வா - இது
புலிகள் வாழும் தேசம் - பெரும்
புயலாய் மாறும் நேரம்

(இறுதி)

எரியும் தணலை எலிகள் உண்ண
எப்படி முடியும் முடியும் - புலி
எழுந்து விரைந்து சினந்து பாய்ந்தால்
எதிரிகள் பாசறை சரியும்
சட்டத்தை தகர்த்து நொருக்கி
தர்மத்தை அழிக்க நினைக்கும்
கூட்டத்தை விரட்டி அடிக்க
எழுந்து விரைந்து வா வா - வா

(இறுதி)

இளைஞர் யுவதி கிழவன் மழலை
எல்லாம் புலிதான் புலிதான் - எமை
எரித்து அழிக்க நினைக்கும் பகைவர்
படைகள் எல்லாம் பலிதான்
மனிதத்தை அழிக்க நினைக்கும்
மதிகெட்ட அரக்கர் இனத்தை
தலைவெட்டி சரித்து சிரிக்க
எழுந்து விரைந்து வா: வா வா

(இறுதி)

வீட்டுக்கொருவர் வேங்கைகளானால்
வேதனை அகலும் அகலும் - இங்கு
வெடியால் மடியும் கொடிய செயல்கள்
விரைவாய் மறையும் மறையும்
மானத்தில் விளைந்த தமிழ்
அவமானத்தில் அழுந்தி உயிர்விட
மூலைக்குள் முடங்கி இருந்திடலாமோ எழுந்து வா-வா வா

(இறுதி)

போர்ப்பறை
பாடல் **10**

பாடியவர் - குட்டிக்கண்ணன்

எங்கள் அண்ணன் பிரபாகரன் - தமிழ்
ஈழம் தந்த கருணாகரன்
எங்கும் புகழ் படைத்தானவன் - எங்கள்
இன்னல் களைத் துடைத்தானவன்

(எங்கள்)

சத்தியத்தை மதித்தானவன் - தமிழ்
தாயகத்தைத் துதித்தானவன்
முத்தமிழை வழர்த்தானவன் - வீர
முத்திரையைப் பதித்தானவன்

(எங்கள்)

ஆதிக்கத்தை வதைத்தானவன் - எங்கும்
அன்புதனை விதைத்தானவன்
பாதகத்தை கலைத்தானவன் - இந்த
பார் புகழ நிலைப்பானவன்

(எங்கள்)

அண்ணல் வழி அணி சேருவோம் - அவர்
ஆற்றலினால் பகை நீக்குவோம்
கன்னித் தமிழ் துயர் நீக்குவோம் - வீர
காவியத்தை உருவாக்குவோம்.

(எங்கள்)



"நாம் எமது படைபலத்தை பெருக்கிப் போராட்டத்தை தீவிரமாக்க வேண்டும் தமிழ் மக்கள் தமது அரசியற்தலை விதியை தாமே நிர்ணயிப்பதாயின் தமிழரின் படைபலம் பெருக வேண்டும். எமது படையமைப்பை பலப்படுத்திக் கொள்வதன் மூலமே நாம் பாதுகாப்பாக வாழமுடியும்; நாம் எமது இழந்த மண்ணை மீட்டெடுக்க முடியும். எமது சொந்த இடங்களுக்கு சுதந்திர மனிதர்களாக திரும்பிச் செல்லமுடியும். போராடித்தான் வாழ வேண்டும் என்ற நிர்ப்பந்தத்திற்கு தமிழ்த் தேசம் தள்ளப்பட்டிருக்கிறது. இந்தத் தேசியப் பணியிலிருந்தும்- வரலாற்றின் அழைப்பிலிருந்தும்- தமிழ் இளம் பரம்பரை ஒதுங்கிக் கொள்ள முடியாது. காலம் தாழ்த்தாது எமது விடுதலை இயக்கத்தில் இணைந்து கொள்ளுமாறு தமிழ் இளைஞர்களுக்கும் இளம் பெண்களுக்கும் நான் வேண்டுகோள் விடுக்கின்றேன்."

தமிழீழத் தேசியத் தலைவர்



சந்திரன் பதிப்பகம், புதுக்குடியிருப்பு